ஸ்ரீராமாநுஜன்—363

ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரிய ஸ்வாமி**

தொகுதி—31 | காளயுக்தி௵ ஆடி௴ **10—8—1978** | பகுதி—3

# பெரியார்களின் பெருமை வெளியீட்டைப்பற்றி

சென்றவிதழில் "சதாப்தி கடந்த பெரியார்களின் பெருமை" என்றொரு கட்டுரையை வெளியிடத் தொடங்கி ஸ்ரீமத்பரமஹம்ஸ. தேரழுந்தூராண்டவனளவாக முப்பத்திரண்டு பெரியார்களின் பெருமையை வெளியிட்டு, "இன்னும் முப்பது ஸ்வாமிகளின் பெருமை வெளிவரும்" என்று நிறுத்தியிருக்கிறோம். அதன் தொடர்ச்சியை இப்போது தொடங்குகிறோம். அந்தக் கட்டுரையை வாசித்தவர்களில் ஏறக்குறைய அறுபது நண்பர்கள் தங்களுடைய ஆனந்தத்தை நேரிலும் கடிதங்கள் மூலமாகவும் அளவு கடந்து தெரிவித்துள்ளார்கள். இது, பிற்காலத்தவர்களுக்குப் பேருதவியாகுமென்பதை ஒவ்வொருவரும் தெரிவித்தார்கள். மிக முற்காலத்தவர்களான ஆழ்வார்களின் காலத்தைப்பற்றி அவரவர்கள் தோன்றினபடியெழுதிக் கொண்டிருப்பது கிடக்கட்டும். ஆசாரியர்களின் காலத்தைப்பற்றியுங்கூட அபிப்ராய பேதங்கள் காணப்படுகின்றன. இப்போது நவீனர்களாக மதிக்கப்படுகின்ற மஹான்கள் நாளடைவில் புராதனர்களாக எண்ணக்கூடியவர்களாவர்களன்றோ? "ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்" என்று பணித்தருளுகிறார் ஸ்வாமிதேசிகன்.



ஆகவே இங்ஙனம் பெரியார்களுக்கு ஒருபட்டிகை அவதரிப்பது, பிற்காலத்தில் இப்பெரியார்களின் காலத்தைப்பற்றிப் போராட்டம் விளையாமலிருப்பதற்கு உறுப்பாயிருக்குமன்றோ? முக்கியமாகத் தென்னாட்டில் வாழ்ந்தபெரியார்களையே நாம் அறியவல்லோம். அதிலும் விசாலமான இந்நிலவுலகில் தோன்றியிருந்த பெரியார்களெல்லாரையும் நாம் அறிந்திருக்கவும் முடியாது. ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம், ந்ருஸிம்ஹப்ரியா, ஸ்ரீரங்கநாதபாதுகாபத்ராதிபர்களுக்கும் இத்தகைய வெளியீட்டில் அபிநிவேசம் தோன்றினால் நன்றே. அவரவர்கள் ஜீவித்திருக்குங்காலத்தில் அவர்களுடைய பெருமைகளை யெடுத்தெழுதி வெளியிட இருப்த்தாலும். "கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து" என்று பெரியாழ்வாரருளிச் செய்யுங் கணக்கிலே மறைந்தவர்களின் உண்மையான பெருமைகளைக் கூசாமலெழுதலாமே. இது நிற்க; சதாப்தி கடந்த பெரியார்களின் பெருமைகளை யெழுதுவதுபோல, சதாப்திக்கு ஸந்நிஹிதராயுள்ளவர்களின் பெருமைகளையும் பிரசுரம் செய்யலாமேயென்று பல நண்பர்கள் தெரிவிக்கிறார்கள். அதையும் ஆமோதிக்கிறோம். அவரவர்கள் அன்புடன் தெரிவிக்கும் பெரியார்களையும் ஆதரித்து வெளியிடுவோம். ... ... •

# சதாப்திகடந்தபெரியார்கள் (முன்தொடர்ச்சி)

## 33 ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி ராமானுஜாசார்ய ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சீபுரியில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து தொண்ணூற்றைந்து வருடமிருக்கும். ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களும் அஷ்டாதச ரஹஸ்யங்களும் வியாக்கியானங்களும் அந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களென்று அஸ்மதாசார்யரான ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி (ஷஷ்டி ஜீயர் ஸ்வாமி) அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமியை அடியேன் ஸேவிக்க ப்ரஸக்தியில்லையாயிற்று. அந்த ஸ்வாமியின் பெரும்புகழ் அபாரமானது. ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பா ஸ்வாமியென்று ப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த ஸ்ரீக்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமியும் இவரும் ஸமகாலஸ்தர்களாய். பரஸ்பரம் வெகு கௌரவத்தோடு வாழ்ந்தவர்களாம். இந்த ஸ்வாமியின் திருக்குமாரர் ஈச்சம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்பவர் மஹாதேஜஸ்வியாகவும் மஹாஜ்ஞாநாதிகராகவும் விளங்கினவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் இளமையில் குருபரம்பராப்ரபாவம் (ஆறாயிரப்படி) ஸேவித்தேன். அந்த ஸ்வாமி பரமசாந்தர். மஹாஸாத்விகப்ரக்ருதி. திருமாளிகையை விட்டுக் கீழேயிறங்காமல் ஏகாந்த சீலராக எழுந்தருளியிருந்தவர். ... ... ... •

## 34 ஸ்ரீமதுபயவே. குன்றபாக்கம். திருமலை. அனந்தாண்பிள்ளை அண்ணங்கராசார்யர் ஸ்வாமி

ஸ்ரீ காஞ்சியில் ஜகத்விக்க்யாத வித்வானாக எழுந்தருளியிருந்த குன்றபாக்கம் சீமாச்சார் ஸ்வாமியின் திருத்தம்பியாரான இந்த அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும்

நியாயவேதாந்த வித்வானுகக் கீழண்டை மாடவீதியில் எழுந்தருளியிருந்தார். இவரும் நியாயபாட ப்ரவசனம் செய்து கொண்டிருந்தவரே. கடைசியில் திருவல்லிக்கேணி சென்று சேர்ந்து ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதியில் உபயகோஷ்டி நிர்வாஹகராக இருந்து அவ்விடத்திலேயே அறுபதாண்டுகட்கு முன்பு திருநாட்டுக்கு எழுந்தருளினர். ... ... ... ...

## 35 ஸ்ரீமதுபயவே. காளி. ரங்காசாரியர் ஸ்வாமி

மாயவரம் தாலுக்காவில் காளி யென்பது ஒரு அக்ரஹாரம். அவ்விடத்தில் உதித்துத் தேரழுந்தூரில் வாழ்ந்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் நெடுங்காலம் தானுதிகாரி பதவியை அலங்கரித்திருந்தார். பிறகு விச்ராந்தராய் தமது திருக்குமாரரோடுகூட வஸிக்கவேண்டி கரக்பூரிலும் கல்கத்தாவிலு மெழுந்தருளியிருந்து கடைசியாக புது டில்லியில் இருக்கும்போது திருநாடலங்கரிக்க நேர்ந்துவிட்டது. அது இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்குமேல் ஆய்விட்டது. இந்த ஸ்வாமியின் பரிசயம் எமக்கு விசேஷமாக இருந்தது. இவர்க்கு மதத்ரய நிரூபகரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. அந்த ப்ரஸித்திக்கு ஏற்பச் சில க்ரந்தங்களு மியற்றி பிரசுரம் செய்திருக்கிறுர். ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் ஸங்கேதபீதியில்லாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடும்தான்மை இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் வெகுநாள் அநுபவித்த மஹாகுணம். அடியேனுடைய க்ரந்தங்களைப் பெருப்பாலும் சடாக்ஷித்தருளி அபிநந்தன பத்ரிகைகள் வெளியிட்டவர் இந்த ஸ்வாமி. *ரூபமேவாஸ்யைதந்மஹிமாநம் வ்யாசஷ்டே யென்னும்படி ஸேவை ஸாதித்துக்கொண்டிருந்தவர். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்வரூப க்ரந்த காலக்ஷேபம் செய்தவர்கள் பலர். அன்னவர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. கோமல் சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி *ராமாயண பூஷணுதி பிருதாலங்க்ருதராய் சிலபல ஸம்வத்ஸரங்கள் சென்னையில் ப்ரவசன துரந்தரராயிருந்து நாலைந்து வருடங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தார்.

## 36 ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவில்லிபுத்தூர் மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி

இப்போது திருமலை திருப்பதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. பெரியஜீயர்ஸ்வாமி யாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமஹா ஸ்வாமிக்கு பூர்வாச்ரமத்தில் உறவினரான இந்த ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூரில் மேலைவாத்யாரென்றே வ்யபதிஷ்டரா யெழுந்தருளியிருந்த சிஷ்டாக்ரேஸரர். இந்த ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு இளமையிலேயே கிடைத்தது. இருவோமுக்கும் தேச வ்யவதானம் மிகவுமிருந்தாலும் மதுரை கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலானவிடங்களில் பலகால் ஸந்திக்க நேர்ந்ததுண்டு. ஸ்ரீவில்லிபுத்தூரிலும் பலமுறை ஸேவித்தேன். இவர் சிறந்த வித்வானுயிருந்ததோடு ஆசுகவி, சித்ரகவி இத்யாதி பிருதாவளிகளையும் பெற்றிருந்தார். சிஷ்டாக்ரேஸரர் என்பதை முந்துற முன்னமே விஜ்ஞாபித்தேன். இவரிடத்தில் அடியேன் அதிகமாகக் கண்ட குணம் ராஸிக்யம். அது ஸாமான்யமன்று. பரமரஸிகர், மஹாரஸிகர் என்று எவ்வளவெழுதினுலும் போதாது. இவ

ரிடத்தில் ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் அதிகரித்தவர்கள் பலருளர். இவருடைய ஸ்வீக்ருத குமாரரான உ. வே திருவாழி ராமாநுஜய்யங்கார் வாக்மியாக விளங்கிவருகிருர்.

## 37 ஸ்ரீமதுபயவே தி. அ. அக்காரக்கனி ராமாநுஜாசார்ய ஸ்வாமி

திருமலை அனந்தாழ்வான் வம்சஸ்தராய் திருநாராயணபுரத்தில் திருவவதரித்தவரான அக்காரக்கனி ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்பவர் உபயவேதாந்த ப்ரவீணராயெழுந்தருளியிருந்து வடநாட்டில் மாலவதேசத்திலும் குர்ஜர ப்ராந்தங்களிலும் பகவத்ராமாநுஜ தர்சனத்தைப் பிரசாரம் செய்ய எழுந்தருளிப் பல நூற்றுக்கணக்கானவர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாகத் திருத்திப்பணிகொண்டு விக்யாதராக எழுந்தருளியிருந்தவர். இந்த ஸ்வாமியின் திருக்குமாரரே அடியேனது ஜ்யேஷ்டஜாமாதாவான நியாயவேதாந்த வித்வான் அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர். ... •

## 38 ஸ்ரீமதுபயவே பெங்களூர் கல்கி. நரசிம்ஹாசாரியார் ஸ்வாமி

தொண்டனூர் பிரதிவாதிபயங்கரவம்சஸ்தர் என்று வ்யபதிஷ்டராயிருந்த இப்பெரியவர் வேதாந்தவாதாவளீகாரராக ப்ரஸித்தராயிருந்த மஹாவித்வத் ஸார்வபௌமரான மண்டயம் அனந்தாழ்வார் ஸ்வாமியின் பாகிநேயரென்று ப்ரஸித்தரான வித்வான். அனேக க்ரந்தங்களெழுதின மஹாகவி; திருவாய் மொழியாயிரத்தையும் அதிஸரளச்லோகபத்தமாக்கி அச்சிட்டு வெளியிட்டிருப்பவர். அதற்கு ஸஹஸ்ரகாதாரத்னவளியென்று பெயர். அதற்குக் கன்னட பாஷையில் வியாக்கியானமுமிட்டிருந்தாரென்று கேள்வி. இடையில் இவர்க்கு சித்தவிப்ரமம் விளைந்து தம்மைக் கல்கியவதாரமாகச் சொல்லிக்கொண்டிருந்ததனுலோ வேறுகாரணத்தினுலோ இவர்க்குக் கல்கிஸ்வாமியென்றே ப்ரஸித்தி விளைந்தது. ... ... •

## 39 ஸ்ரீமதுபயவே. உளுந்தை ரங்காசாரியார் ஸ்வாமி

ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் ஸந்நிதி வீதியில் எழுந்தருளியிருந்த மஹாஸ்வாமி 'உளுந்தை ரங்காசாரியார் ஸ்வாமி என்று ப்ரஸித்தரானவர் வந்தவாசியருகில் உளுந்தையென்னும் அக்ரஹாரத்தில் சிஷ்யர்களையுடையராய் அடிக்கடி அங்கும் வாஸமாக இருந்தபடியால் உளுந்தை ரங்காசார்யரென்று வ்யபதிஷ்டராயிருந்தார். இந்த ஸ்வாமி ஜ்ஞானநுஷ்டான ஸம்பன்னராயிருந்ததோடு ஸர்வபூதஸுஹ்ருத்தென்று பேர்படைத்தவர். திருநாடலங்கரித்து 50 வருஷமாகிறது.

## 40 ஸ்ரீமதுபயவே. புத்தூர் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

இப்போது உலகப்பிரசித்தமாய் நடைபெற்றுவருகின்ற ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ரிகையைத் தொடங்கின மஹான் இவர். இப்போதைய ஆசிரியரான ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் M. A. B. L. அட்வகேட் ஸ்வாமியின் திருத்தகப்பனர். நமது பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளையெல்லாம் அச்சிடுவதற்கு ஸங்கல்பித்துப் பல ஸ்ரீகோசங்களை யச்சிட்டு, மேன்மேலும் சாச்வதமாக அச்சிட்டுவர மூலதனநிதியையும் ஸ்தாபித்துவைத்திருப்பவர் இப்பெரியார். ... ... •

## ஸ்ரீமதுபயவே. புத்தூர் ஸ்வாமி வைபவ தொடர்ச்சி
# பொன் விழா மலரின் விமர்சநம்

(விமர்சனம் செய்பவர் ஸ்ரீமதுபய வேதாந்தவித்வான்
*தி. அ. சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரிய ஸ்வாமி, ஸ்ரீரங்கம்)*

இம்மலர் ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிகா ஸ்ரீவைஷ்ணவ ஸபையின் பொன்விழாவில் வெளியிடப்பட்டது.

இது மிக அத்புதமாக அமைந்திருப்பதால் இதனைச் சிறிது விமர்சிக்கலாகிறது.

இம்மலர் மொத்தம் நான்கு பகுதிகள் கொண்டது. முதல் இரண்டு பகுதி 296 பக்கங்கள் கொண்டதாகவும், மூன்றாம் பகுதி 84 பக்கங்கள் கொண்டதாகவும், நான்காம் பகுதியில் முதல் கட்டுரை 12 பக்கங்கள் கொண்டதாகவும் மற்றொரு கட்டுரை 22 பக்கங்கள் கொண்டதாகவும், மொத்தம் 414 பக்கங்கள் கொண்ட மலராக மலர்ந்திருக்கிறது.

இதனை உள்புகுந்து அநுபவிக்குங்கால் ஒவ்வோர் பக்கமும் மிக அருமையான விஷயங்களைத் தன்னுள் கொண்டிருப்பதால் உண்மையில் மனத்தை மலர்த்தும் மலராகவே திகழ்கிறது. ஆனால் இவைகளுக்கு ஓர் தனிச்சிறப்பு, இம்மலர்கள் என்றும் வாடாமலர்கள் என்பதே.

சில திவ்யதேசத்தெம்பெருமான்களுடையவும், சில ஆழ்வார் ஆசார்யர்களுடையவும் திருவுருவப்படங்களும் அழகுறத் திகழ்கின்றன. இம்மலரைக் கையில் கொண்டு அவைகளை மாத்திரமே கண்களால் அநுபவித்தால் கையில் மலருடன் அவ்வெம்பெருமான்களையும் ஆழ்வாராசார்யர்களையும் அநுபவித்த பயனைப் பெறலாகிறது.

இம்மலரில் பெரும்பான்மையான கட்டுரைகள் எழுதி இதை அச்சிட்டு வெளியிட்டவர் எல்லாப் பெருமைகளும் பொருந்திய, ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிபரான ஸ்ரீமதுபயவேதாந்தவித்வான் புத்தூர் அட்வகேட் ஸ். க்ருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியாவர் ஆகையால் விஷயங்களிலோ எழுத்துக்களிலோ பிழை தேடுபவர்களுக்கு ஏமாற்றமே ஏற்படும்.

ஸ்ரீவைஷ்ணவர்களாகப் பிறந்த அனேகர் இக்காலத்தில் தங்கள் மதக் கொள்கைகளையும் மதாசார்யர்களையும் அவர்களின் பெருமையையும் சரித்தையும் ஓரளவேனும் அறியமாட்டாமையால் பிறமதத்தவர்களால் பரிஹஸிக்கப்படுகிறார்கள். அத்தகையார் இம்மலரைக் கைக்கொண்டு அநுபவிக்கப்பெற்றார்களேயானால் அக்குறை தீரப்பெறுவர் என்பது திண்ணம்

ஏன்? பெரிய வித்வான்களுக்கும் அமரகோசமும் சப்தமஞ்ஜரியும் என்றுமே வேண்டியதுபோல இம்மலரும் அஜ்ஞப்ராஜ்ஞவிபாகமற எல்லோருக்கும் உதவக்கூடியதே. இம்மலரில் மூன்றும் நான்காம் பகுதிகளில் 15 கட்டுரைகள் உள்ளன. அவைகள் எல்லாமே நடையிலும் பொருள்விளக்கத்திலும் சிறந்து விளங்குகின்றன. எல்லாமே ஸ்ரீவைஷ்ணவர்கள் அவச்யம் அறியத்தக்க பொருள்களைக் கொண்டவை.

விசேஷித்து நான்காம் பகுதியிலுள்ள "ராமாநுஜநெறி" என்னும் கட்டுரை இராமாநுஜன் ஸித்தாந்தப்படி அறியவேண்டுமர்த்தங்களான ஐந்தர்த்தங்களை மிகத் தெளிவாய் விளக்குவது. கடைசிக் கட்டுரை "ராமலிங்கப்ரதிஷ்டை" என்பது. இக் கட்டுரையையொவ்வொருவரும்அவச்யம் படிக்கவேணும் ராமேச்வரத்திலிருக்கும்லிங்கம் இராமபிரானல் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதென்கிற சைவர்களின் வாதத்தை ஆராய்ச்சி முறையிலும் சான்றுகளைக்கொண்டும் அடியறுக்கிறது. ஆக ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ஸபையின் இந்த பொன்விழாமலர் என்றும் வாடாததோர் பொன் மலரே என்பது திண்ணம். ஆஸ்திகர்கள் அனைவரும் இதனை ஸ்ரீவைஷ்ணவஸுதர்சநமாசிரியரிடம் பெறலாம்.

இத்தகைய மலர்கள் இந்த ஸபையின் மூலம் பல எழுத்தாளர்களைக்கொண்டு வருஷந்தோறும் ஓர் மஹாநாட்டுடன் மலரட்டுமென்று ஸ்ரீரங்கநாதனையும் பெரிய பிராட்டியாரையும் வேண்டிநிற்கிறேன்.

மலர் கிடைக்குமிடம்:—

ஸ்ரீ S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
'ஸுதர்சனம்' ஆசிரியர்,
3, பத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ 8-00 தபால் வகைக் கூலி ரூ: 1-00

---

**41** ஸ்ரீமதுபயவே. திருநாராயணபுரம் **ஜக்கு வேங்கடாசார்யஸ்வாமி**

திருநாராயணபுரம் அநாதிகாலமாகவே வித்வான்களைப் பயிர் செய்யும் மஹா க்ஷேத்ரமென்று ப்ரஸித்தம் இதற்கு எம்பெருமானுருடைய திவ்யகடாக்ஷமே காரண மென்பர். அவ்விடத்தில் ஸ்ரீ ஜக்கு வேங்கடாசார்ய ஸ்வாமியென்பவர் சிறந்த வித்வானுகவும் மஹாகவியாகவும் விளங்கி வந்தார் இந்த மஹாக்ஷேத்திரத்தில் இருபது வித்வான்களுக்குமேல் அடியேனறிவேன். ஒவ்வொருவரும் பரிசணிதரான வித்வன்மணியாக விளங்கினவர். இன்றைக்கும் வித்வான்களுக்கு ஸுபிக்ஷமே.

**42** திருமழிசையிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. **வரதாசார்ய ஸ்வாமி**

**43.** புத்தாம் வேஙகடாசார்ய ஸ்வாமி
**44.** திருவாழி ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி,
**45.** தாதப்பங்கார் ஸ்வாமி
**46.** அய்யன் ராமாநுஜாசார்ய ஸ்வாமி

மேலே குறிப்பிட்ட ஐந்து திருநாமங்கள் திருமழிசையில் பரிசணிதர்களான வித்வான்களாக யெழுந்தருளியிருந்தவர்கள். இவர்களுள் ஸ்ரீவரதாசார்ய ஸ்வாமி ப்ரசண்டபண்டிதோத்தமராக விளங்கி வந்தார் திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினி ஸபையில் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியோடுகூட சாஸ்த்ர பரீக்ஷகராக எழுந்தருளியிருந்தவர்; ஸ்ரீபாஷ்யபகவத்விஷயங்களை நித்யப்ரவசனம் செய்துகொண்டிருந்தவர் புத்தாம் வேங்கடாசார்யஸ்வாமி நியாய வேதாந்தங்களில் மிகவும் பரிச்ரந்தராய் அநுஷ்டான சீலராயிருந்துவந்தார் திருவாழிஸ்வாமி ஸ்ரீபாஷ்யப்ரவச

னத்தில் நிரதராக எழுந்தருளியிருந்தவர் அய்யன் ராமாநுஜாசார்யஸ்வாமி உபய வேதாந்த ப்ரவசன நிஷ்ணாதராயிருந்ததோடன்றி இதிஹாஸ புராணங்களிலும் ப்ர வக்தாவாக இருந்துவந்தார். ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி பத்தெட்டு வருஷ காலம் சென்னை சாரிடிகளில் காலக்ஷேபப்ரவர்த்தகராக எழுந்தருளியிருந்து பிறகு நம்பெருமாள் ஸன்னிதியில் ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்து திருமேனியின் அபாடவத்தினால் திருமழிசைக்கே யெழுந்தருளித் திருநாடலங்கரித்தவர். ... ... ... ...

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

(திருமலை அநந்தாண்பிள்ளை ஸ்ரீமதுபய வேதாந்தவித்வான்

**சதாபிஷேகம் கோவிந்தநரஸிம்ஹாசாரிய ஸ்வாமியின் கட்டுரை)**

நெடுங்காடு வங்கீபுரம் ஸ்ரீமான்

**பரகால வீரராகவையங்கார் ஸ்வாமியின்**

# சதாப்தி மஹோத்ஸவ வைபவ விமர்சனம்

நிகழும் காளயுக்தி வருஷம் ஆடி மாதம், 7ஆம் தேதி அடியேனுக்கு ஓர் சுப தினம். அன்றையதினம் நான்கு திவ்யதேசத் தெம்பெருமான்களை அநுபவிக்கும் பாக்யம் பெற்றேன் அவ்வநுபவபரீவாஹமாயும், அவ்வநுபவத்தைச் செய்துவைத்த ஸ்ரீமான் பாண்டி ஜகந்நாதையங்கார் ஸ்வாமி திறத்தில் க்ருதஜ்ஞதாவிஷ்கார ரூபமாயும் இஃது எழுதப்படுகிறது

(சதாப்திகாணும் தம்பதிகள்)



பாண்டிமாநிலத்தைச்சேர்ந்த காரைக்காலுக்கு அருகிலுள்ளது நெடுங்காடு என்னும் ஓர்கிராமம். அதனில் பகுதான்யவருஷம் ஆடி மாதம் சதய நக்ஷத்திரத்தில் பிறந்த ஓர் ப்ரஜை பிற்காலத்தில் ஆசார சீலராகவும் அஹிம்ஸாதிகுணங்கள் நிறைந்தவராகவும் பகவத் பாகவதாசார்ய கைங்கர்யங்களில் ப்ரதிபத்திகொண்ட வராகவும் 'பரகால வீரராகவையங்கார்'' என்னும் திருநாமத்துடன் திகழ்ந்தார். இவருக்கு இவ்விதச் சிறப்பு பரம்பரையாக வந்ததொன்று. இவருடைய பிதாமஹீ சேஷம்மா என்பவர் திருவாலி திருநகரியில் எழுந்தருளியிருக்கும் குமுதவல்லீ ஸமேதரான திருமங்கையாழ்வாரை ஓர் பெரிய வெண்கலக்குத்துவிளக்கு ஸமர்ப்பித்து நியமத்துடன் வணங்கி வழிபட்டு ஓரோர் பிள்ளையையே பெற்றுவரும் தம்வம்சம் பலபிள்ளைகளைப் பெறவேணுமென்று ப்ரார்த்திக்கப் பிறந்தவருக்கு பரகாலனென ஆழ்வார் பெயரையிட்டுக் குலாவிவந்தார் அந்தப்பரகாலருக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தும் ஜீவித்திருந்தவர் இந்த ராகவையங்கார் ஒருவரேயாவர். ஆனால் பிதாமஹியின் ப்ரார்த்தனை இவரிடமே பலித்தது. இவர் ஐந்து குமாரர்களுக்கும் நான்கு குமாரத்திகளுக்கும் பிதாவானார்.

இவருடைய க்ராமமான நெடுங்காட்டில் ஓர் தெருவுக்கு அந்தணர் க்ருஹம் இவருடையது ஒன்றேயானாலும் அத்தெருவுக்கு அக்ரஹார மெனப்பெயர் வழங்கி வந்தது. அக்கிராமத்தார் அனைவரும் இவர்குணத்தால் கட்டுண்டு இவரிடத்து மிகப் பணிவுடன் பழகிவந்தனர். இவர் மிகப்ரஸித்தரான சிறுபுலியூர் சுத்த ஸத்வம் அண்ணன் திருவடி ஸம்பந்தியாய் அவரிடத்து அப்ரதிமமான ஆசார்ய ப்ரதிபத்தி கொண்டிருந்தார் சிறுபுலியூர் திவ்யதேசத்தில் மிகமிக பண்டினவர். அஜாதசத்ரு. மிக்க ஆசாரசீலர் வெளியூர் சென்றால் ஸ்வயம் பாகமே செய்து கொள்வார்.

பூர்வாசார்ய வ்யாக்யாந க்ரந்தங்களை தெலுங்கு தமிழ் லிபிகளில் அச்சிட்டு வெளியிட்ட ஸ்ரீ வைஷ்ணவக்ரந்த முத்ராபக ஸபையில் தெலுங்கு தமிழ் இரண்டு வகைக்கும் ஜீவிய சந்தாதாரராகி அந்த ஸ்ரீகோசங்களை ப்ரதிமாதமும் பெற்று அநுபவித்துவந்தவர் இவருடைய குமாரர்கள் ஐவரில் கடைசிகுமாரராய் பாண்டியில் வாழும் ப்ரஸித்தரான ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமி இளமையிலிருந்தே இவரிடத்து மிக்கபக்தி கொண்டவர் விளம்பி ஆடிமாதம் 18 ஆம்தேதி சதயம் (2-8-1958) கூடிய சுபதினத்தினன்று தம்தகப்பனாருக்கு சிறுபுலியூரிலேயே ஆடி 18 ஆம் பெருக்கு தீர்த்தவாரி உத்ஸவத்தன்று மணவாளமாமுனிகள் ஸந்நிதியில் பெரிய ததீயாராதனத்துடன் சதாபிஷேகத்தையும் நடத்தி தனிக்கோயில் தாயாருக்கு கஜலக்ஷ்மியாக்க இரண்டு யானைகளையும் ஸமர்ப்பித்தார்.

இப்போது இவரின் சதாப்தியைச் சிறந்தமுறையில் கொண்டாடவெண்ணியும், அதேஸமயம் மஹத்தான ஆபத்திலிருந்து எம்பெருமானின் பரமக்ருபையால் உயிர் பெற்றெழுந்த பெரிய குமாரன் சிரஞ்சீவி வீரராகவனை அண்ணன் பெருமாளையும் சிறுபுலியூர் எம்பெருமானையும் க்ருபாஸமுத்ரப் பெருமாளையும் ஸேவிக்கப்பண்ணுவதற்காகவும் பாண்டியிலிருந்து ஓர் சிறந்த பஸ்ஸை ஏற்பாடு பண்ணிக்கொண்டு அதில் தம் பந்து மித்ரர்களுடனும் பெரிய குமாரனுடனும் தமக்குபரம ஆப்தர்களான ஸ்ரீ. உ வே வித்வான் மேல்பாக்கம் நரஸிம்ஹாசாரிய ஸ்வாமியுடனும் அடியேனுடனும்

ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ.உ.வே அஷ்டகோத்ரம் கற்பூரம் பாஷ்யகாசாரியர் ஸ்வாமியுடனும் புறப்பட்டு காலை 5மணிக்கு திருவெள்ளக்குளம் சேர்ந்து அங்கு அங்கப்ரதக்ஷிண ப்ரார்த்தனையைத் தேவியார் செய்துமுடிக்க;

சிறுபுலியூர் சேர்ந்து அங்கு க்ருபாஸமுத்ரப்பெருமாள் மூலவர் உத்ஸவர் இருவர்க்கும், அநந்த ஸரஸ்ஸின் கரையில் எழுந்தருளியிருக்கும் திருவநந்தாழ்வானுக்கும் விசேஷ திருமஞ்ஜநத்தையும் ததீயாராதனையையும் நடத்தித் திரும்பும் போது திருவிந்தளூர் பரிமள ரங்கநாதனையும் திருவாலி தொழுது திருநகரிசேர்ந்து வயலாலி மணவாளனையும் திருமங்கை மன்னனையும் அவரவர் தேவிமாருடன் ஸேவித்து மறுபடியும் திருவெள்ளக்குளம் வந்துசேர்ந்தார்

அங்குமாலை 7மணிக்கு கருடஸேவை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த கருடோத்ஸவம் கண் கொள்ளாக்காட்சியாய் அமைந்தது. திரு நாங்கூரில் வைகுந்த விண்ணகரம் ப்ரதிவாதிபயங்கரம் திருமாளிகையில் ஸ்ரீ உ வே வித்வான் சின்ன க்ருஷ்ணமாசாரிய ஸ்வாமிக்கு நடைபெறும் சதாப்தி மஹோத்ஸவத்துக்காக வந்திருந்த ஸ்வாமிகளும் இந்த கருடஸேவையை அநுபவித்தார்கள். பிறகு விசேஷமான ப்ரஸாத விநியோகத்துடன் உத்ஸவம் முடிந்தது கைங்கர்யபரர்களுக்கும் விசேஷ பகுமானம் செய்து ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் தம் தகப்பனார் சதாப்தி மஹோத்ஸவத்தைச் சிறப்புடன் இனிதே முடித்து எல்லாருடனும் இரவு 11-30 மணிக்குப் பாண்டி வந்து சேர்ந்தார்.



திருவெள்ளக்குளத்து பட்டாசாரியரான ஸ்ரீமான் ராமஸ்வாமிபட்டாசார் ஸ்வாமி வந்தவர்கள் எல்லாருக்கும் தம் க்ருஹத்தில் காலை ஆஹாரவசதி செய்தும் சிறுபுலியூர்

3

திருமஞ்சநத்தையும் கருடஸேவையையும் தம் குமாரர்களுடையவும் திருப்பார்த்தன் பள்ளி பட்டாசாரான ஸ்ரீமான் லக்ஷ்மணபட்டாசார் ஸ்வாமியுடையவும் ஆப்தர்களுடையவும் ஸஹாயத்துடன் கூடவிருந்து பொறுப்பேற்று நடத்திக் கொடுத்த பெருமை எல்லாரையும் அவருக்கடிமைப்படுத்திற்று. ராமலக்ஷ்மணர்களே கூடவிருந்து நடத்தினர்கள் என்னலாயிருந்தது அடியேனும் இவைகள் எல்லாவற்றையும் கூடவிருந்து அநுபவித்தவனாகையாலே பாண்டியிலிருந்தே இதையெழுதுகிறேன்.

நம் ஸ்ரீமான் ஜகந்நாதையங்கார் ஸ்வாமிக்கும் குடும்பத்தாருக்குப் விசேஷித்து மஹாந்தான ஆபத்திலிருந்து தப்பிப்பிழைத்த இவர் குமாரன் சிரஞ்ஜீவி வீரராகவனுக்கும் இந்த திவ்யதேசத்தெம்பெருமான்கள் எல்லாச்ரேயஸ்ஸுக்களையும் உண்டாக்கித் தரவேணுமென்று ப்ரார்த்தித்து நிற்கிறேன்.

மதுரகவிதாஸன்

சதாபிஷேக கோவிந்தநரஸிம்ஹார்ய தாஸன்.

## (இனி, சதாப்திகண்ட பெரியார்களின் பெருமை—தொடர்ச்சி)

## காஞ்சி நல்லான் சக்ரவர்த்தி தேசூர் ஸ்வாமிகள் நால்வர்

**47** ஸ்ரீகாஞ்சியில் தென்னண்டை மாடவீதி வடவண்டை மாடவீதி, கீழண்டைமாடவீதிகளில் நல்லான் சக்ரவர்த்தி தேசூர் ஸ்வாமிகள் பரிசணநீயர்களாக எழுந்தருளியிருந்தார்கள் (1) ஸ்ரீமதுபயவே. சக்ரவர்த்தி. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி யென்பவர் தென்னண்டைமாடவீதியில் எழுந்தருளியிருந்தவர் இந்த ஸ்வாமி இதிஹாஸ புராணங்களிலும் அருளிச் செயலிலும் வல்லவராயிருந்தார் இந்த ஸ்வாமியின் பௌத்திரர்கள் பாங்காக விளங்கிவருகிறார்கள். (2, 3 ஸ்ரீமதுபயவே தேசூர் பெரியரங்கஸ்வாமி ஐயங்கார், சின்ன ரங்கஸ்வாமி ஐயங்கார் என்கிற இருவர் வடவண்டைமாடவீதியில் எழுந்தருளியிருந்தவர்கள். சிறந்த பகவத் விஷயாசாரிகள். இவர்களில் பெரியவர் இருபது ஸம்வத்ஸரங்களுக்குமேல் திருமலை திருப்பதி தேவஸ்தான வித்யாலயத்தில் திவ்யப்ரபந்த உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார் இவருடைய திருக்குமாரர் உத்யோகத்தில் விச்ராந்தராய் மேதாவியாய் விளங்கி வருகிறார் தௌஹித்ரர்களிருவர் லௌகிகத்தில் உயர் பதவியில் வாழ்கின்றனர் (2) சின்ன ரங்கஸ்வாமி ஐயங்கார் ஐம்பது வருஷங்களுக்கு மேலாகத் தேவப்பெருமாள் ஸன்னிதியில் அத்யாபக கைங்கரியம் நிர்வஹித்தமஹான் இந்த ஸ்வாமிக்கு சதாப்தீ மஹோத்ஸவம் அணித்தாகவுள்ளது. இவருடைய தௌஹித்ரர்கள் இருவர் சென்னையில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்குகின்றனர். ... ...

**48** ஸ்ரீமதுபயவே. (கோவை) ஸ்ரீசைல சக்ரவர்த்தியாசார்ய ஸ்வாமி

இந்த மஹாஸ்வாமி கோயம்புத்தூரில் சுமார் முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு பிரபல அட்வொகேட்டாக எழுந்தருளியிருந்தவர் இவருடைய உபய வேதாந்த பாண்டித்யமும் காவ்ய நாடகாலங்காரங்களில் அப்ரதிமமான நைபுண்யமும் மிகவும் கொண்டாடத்தக்கதாயிருந்தது. வித்வத்பரம்பரையில் சேர்ந்தவர். பலர்க்கு உபயவேதாந்த காலக்ஷேபம் ஸாதித்துப் புகழ் பெற்றவர் உபயவேதாந்த

ரஹஸ்யப் பொருள்களை ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிச் சில நூல்கள் வெளியிட்டவர். இவருடைய மூத்த திருக்குமாரரான ஸ்ரீமான் V. S. R. சக்ரவர்த்தியென்பவர் மிகவும் மேதாவியாயும் ஆழ்வாராசார்ய திவ்யஸூக்தி ப்ரவணராயும், லௌகிகத்திலும் உயர்பதவியில் வாழ்ந்தவராயும் பரமதார்மிகராயும் விளங்கினவர் சென்ற மாதத்தில் ஹ்ருதயகோசதௌர்பல்யத்தினால் திடீரென்று பாம்பே (Bombay) மகாநகரத்தில் பரமபதித்தது அத்யந்தம் சோசநீயம் ஜகத்ப்ரஸித்த நாட்யவிஹாரநிடுணையான சிரஞ்சீவிநீ ஹேமமாலினியென்பவள் இவருடைய புதல்வியே சிரஞ்சீவிகளான திருக்குமாரர்களிருவரும் திருத்தம்பியாரான ஸ்ரீமான் வாஸுதேவ சக்ரவர்த்தி ஐயங்காரும் நீடூழி வாழ்க. ... ... ... ●

## 49 ஸ்ரீமதுபயவே. கோயில் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி

ஸ்ரீரங்கம் ஸ்தலாசார்ய புருஷ தீர்த்த மிராசுதாரர் கபிஸ்தலத்தில் தஞ்சாவூரில் பெரும்பாலும் எழுந்தருளியிருந்தவர் தஞ்சாவூரில் உயர்பள்ளி ஆசிரியராயிருந்ததோடு 'ராமாநுஜதர்சன சபை' என்றொன்று நிறுவி நாள்தோறும் ரஹஸ்யக்ரந்தங்கள் பகவத்விஷயங்கள் காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்தனர். சிதம்பரத்தில் ஆறு வருஷங்கள் அப்படியே யெழுந்தருளியிருந்தார். கடைசியில் விருத்தாசலத்தை யடுத்த வஸிஷ்டபுரம் என்னும் ஸ்ரீக்ராமத்தில் கோவிலண்ணன் திருவடி ஸம்பந்திகளான ஜோதிஷ ரத்னாகரம் ராமாநுஜாசாரியர் ஆதரவில் பகவத் விஷய காலக்ஷேபம் தொடங்கி ஸாதித்து வருங்காலத்து விய வருஷம் பங்குனி யுத்தரத் திருநாளில் காலை 7 முதல் 9 வரை காலக்ஷேபம் ஸாதித்திருந்து அடுத்த 15 நிமிஷங்களில் ஹ்ருதய நலிவினால் திடீரென்று திருநாடலங்கரித்தருளினார். இவருடைய திருக்குமாரர்களிருவரில் மூத்தவர் கபிஸ்தலத்திலும் இளையவர் ஸ்ரீகாஞ்சியிலும் ப்ரதிஷ்டிதர்களாய் ஸம்ப்ரதாய ப்ரவசன நிரதந்தரர்கால் விளங்குகின்றனர் ... ... ... ●

## 50 ஸ்ரீமதுபயவே. விசாகப்பட்டணம். பரவஸ்து பட்டநாதஸ்வாமி

விசாகப்பட்டணத்தில் பரவஸ்து குடும்பத்தார் இன்றைக்குமுளர். மஹாமஹோபாத்யாய பரவஸ்து. ரங்காசார்ய ஸ்வாமியென்பவர் மிகப்ரஸித்தர். அவரை அடியேன் ஸேவித்ததில்லை அவருடைய திருவுருவப்படம் ஸம்பாதித்து வெளியிட்டிருக்கிறேன் இவருடைய பரம்பரையை வித்வத் பரம்பரையென்று முழங்குவர்கள். இவர்கள் பகவத் ராமாநுஜ தர்சனஸ்தர்களாயிருந்தும் 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று எழுதார்கள்; "நம: பரமர்ஷிப்ய" என்றே எழுதுவர்களாம் மேலே ப்ரஸ்தாவித்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர்களில் ஒருவர் பட்டநாதஸ்வாமியென்பவர் கும்பகோணம் காலேஜில் ப்ரொபஸராயிருந்தவர். மற்றொருவர் திருப்பதி காலேஜில் பலவாண்டுகள் வாழ்ந்து விச்ராந்தரானவர். அவருடைய பரிசயம் அடியேனுக்கு மிகக் குறைவு. பட்டநாதஸ்வாமியென்பவர் சிறந்த சாஸ்த்ரஜ்ஞர்; மஹாமேதாவி. அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் கும்பகோணத்தில் வாழ்ந்துவந்த அவர் பத்ரிகா மூலமாகவே மிகவும் பரிசிதராயிருந்தார் இவர் தென்கலை ஸம்பிரதாயஸ்தராயிருந்தும் உபயஸம்ப்ரதாயக்கொள்கைகளிலும் ஐகமத்யங் காட்டிக் கொண்டிருந்தார். முமுக்ஷுப்படியில் "உய்யக்கொண்டார் விஷயமாக

உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது'' என்றொரு ஸ்ரீஸூக்தியுண்டே. அத்தை நினைவூட்டுமவரா யிருந்தாரிவர். மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் இவர்க்கும் எமக்கும் நிகழ்ந்த லேகப்ரதிலேகங்கள் அபரிமிதம். கடைசியில் மிக்க அநுதாபங் கொண்டு திருத்தமுற்றார். திருநாடுமலங்கரித்தார். ... ... •

## 51 ஸ்ரீமதுபயவே. சிறுபுலியூர் தொட்டயாசார்யஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரில் மஹாவைபவசாலியாகவும் ப்ரக்க்யாதராகவுமெழுந்தருளி யிருந்த சிறுபுலியூர் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாமறியும். சிறந்த சிஷ்ய ஸம்பத்து வாய்ந்தவர். ''ஞானமனுட்டான மிவை நன்றாகவே யுடையனான குரு'' என்ற பாசுரத்திற்கு ப்ரதம லக்ஷ்யமாக எழுந்தருளியிருந்தவர். அந்த மஹா ஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் மஹாபண்டிதோத்தமராய் திருத்தகப்பனாரோடு கூடவே வாழ்ந்தவர். இளைய திருக்குமாரர் தொட்டயாசார்ய ரென்பவர் காஞ்சியில் விவாஹ ஸம்பந்தம் பெற்றவர். பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வஸித்துவந்தவர். பண்டிதோத்தமராக விளங்கி வந்தார். (செவிடு தொட்டயாசாரியர் என்று இவர்க்கு ப்ரஸித்தி) இவர் பாணன் பவபூதி முதலான கவிகளைப் போன்று கவிதையில் நிகரற்றவராய் விளங்கினார். கத்யபத்யங்கள் அத்யாச்சர்யமாக எழுதுவர். அவரைப்போன்ற எழுத்தாளர் அவரே யென்னலாம். அவர் ''விசக்ஷணா'' என்றொரு ஸம்ஸ்க்ருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில மாதங்களே நடத்தினார். அப்போது அவருடைய நட்பு அடியேனுக்கு அதிகமாக விளைந்தது. அவர் இன்னமும் ஜீவித்திருக்கவேண்டியவர். [இனிமேல் அத்யந்த சோசநீயம்] அவருக்கு ச்வசுரக்ருஹம் காஞ்சீ ஸந்நிதி வீதியிலாகையால் அடிக்கடி அங்குவரநேரும். ஸந்திக்கிறபோதெல்லாம் சொல்லுவர்— 'நான் ஏதோ லௌகிகனாயிருந்துவருகிறேன். என்னுடைய திருத்தமையனார் மஹாசிஷ்டர் மஹாபண்டிதர்; அவரை ஸந்திக்க வேணும்' என்று அவருடைய பரிசயமும் பத்ரிகை மூலமாக அடியேனுக்கு ஏற்பட்டிருந்தது. அவர் எங்கும் எழுந்தருளுகிறவரலல்லாமையால் நேரில் விடை கொண்டு ஸேவிக்கவேணுமென்று பாரித்துக்கொண்டிருந்தேன். இப்படி யிருக்கையில் இந்த தொட்டயாசாரியர் ஒருநாள் காஞ்சீபுரம் வந்து ''ஜ்வரத்துடன் இங்கு வந்திருக்கிறேன், நீ வந்துபார்க்கவேணும்'' என்று ஸந்தேச மனுப்பினார். அன்று நாதமுனிகள் சாத்துமுறை ஸாயங்காலம் அவரிடம் சென்று ஒரு நாழிகை வார்த்தையாடி விட்டு ஸந்நிதிக்குச் சென்று சாத்துமுறை யநுபவித்துக் கொண்டிருக்கையில் 'தொட்டயாசார்யர் பரமபதித்துவிட்டார்' என்று ஒருவர் வந்து சொன்னார். இந்த பரிதாப கதையை இவ்வளவில் நிறுத்துகிறேன். ... ... ... •

## 52 ஸ்ரீமதுபயவே. ஆநூர் ரங்கஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி

ஆநூர் ஸ்வாமியை அடியேன் இளமையில் ஸேவித்திருந்தாலும் அதிகமாக நெருங்கிப் பழகினதில்லை. திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்தினீ ஸபையில் பரீக்ஷகராக எழுந்தருளின காலத்தில் இரண்டொரு தடவை ஸேவித்ததத்தனை. அக்காலத்தில் இந்த ஸ்வாமியின் ப்ரக்க்யாதி ப்ரபலமாக இருந்தது. ஸ்ரீமத் ஆநூர் ஸ்வாமி பல வருஷங்கள் நம்பெருமாள் ஸந்நிதியிலெழுந்தருளியிருந்து பிறகு ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்திரவாஸியாகி எழுபத்தைந்து திருநக்ஷத்திரம் இவ்விபூதியை அலங்கரித்

திருந்தார். 1905ஞ விசுவாவஸு வருஷத்தில் விண்ணுலகெய்தினர். ஸ்வாமி ஸ்ரீராமாயணம், பகவத்கீதை, பகவத்விஷயம், ரஹஸ்யங்கள்போன்ற க்ரந்தங்களைப் பலகால் ப்ரவசனம் செய்தருளினதோடு தர்க்கசாஸ்த்ர பாடங்களும் பலர்க்குச் சொல்லிவந்தார். ... ... ... ...



கீழே பக்கம் 11ல் லக்கம் 49 கோயில் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியின் பெருமை வெளியிடப்பட்டுள்ளது அவருடைய திருவுருவப்படம் தாமதமாகக் கிடைத்தபடியால் அது இங்கே வெளியிடப்படுகிறது.

## 53 ஸ்ரீமதுபயவே. ஸாரநாதாசாரியர் ஸ்வாமி

கீழே ஸ்ரீமதுபயவே. ஆர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமியின் பிரபாவ மெழுதினோம்; "இந்த ஸ்வாமியின் ஜ்யேஷ்டதுஹிதாவின் குமாரர் ஸாரநாதாசார்யரென்று ப்ரஸித்தராய் இளமையிலேயே மிகச் சிறந்த வித்வானென்று புகழ்பெற்றூர்; மாதாமஹர்க்குமேல் சிறந்துவிளங்குவரென்று பலரும் கொண்டாடவிருக்கையில் முப்பது பிராயத்திற்குள்ளேயே ஆசார்யன் திருவடிசேர்ந்துவிட்டார்" ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸ்ரீ ஸாரநாதாசாரியர் பரிகணநீயராய் விளங்கினவர். நியாய வேதாந்தங்களைக் கசடறக் கற்றவர் ச்ருதப்ரகாசிகையோடுகூட ஸ்ரீபாஷ்யத்தை திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்திநீ ஸபையில் பரீக்ஷை கொடுத்து உத்தம ஸன்மானம் பெற்றுவந்த சில நாட்களில் ஆசாரியன் திருவடி சார்ந்துவிட்டார். ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதியில் ப்ரதிபக்ஷிகளின் அதர்க்கணச் செயல்கள் அதிகப்பட்டிருந்த காலத்தில் நீதி மன்றங்களிற் சென்று சிரமப்பட்டு வெற்றிபெற்றவர்களில் இவர் தலைவராய் விளங்கினவரென்று அக்காலத்தில் ப்ரஸித்தியிருந்தது.

## 54 ஸ்ரீமதுபயவே. மேட்டூர் ராகவாசாரியார் ஸ்வாமி

ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி காலத்தில் ஆந்திர தேசங்களிலிருந்தும் பலர் ஸ்ரீபெரும்பூதூர்வந்து வாசித்து சாஸ்த்ர ப்ரவீணர்களாய் உபயவேதாந்த விசாரதர்

களாய் விளங்கினதை அடியேன் இளமை தொடங்கி அனுபவித்தவன். அன்னவர்களில் மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி யென்பவர் (கோதாவரீ ப்ராந்தஸ்தரென்று ஞாபகம்) ஸ்ரீபெரும்பூதூரில் வந்திருந்து கலைகற்று மஹாமேதாவியாய் விளங்கினவர்; நம்முடைய ஸம்பிரதாயங்களை ஆந்திர பாஷையில் வெகுசதுரமாக உபந்யஸிக்க வல்லவர். பிறகு கோதாவரீ ப்ராந்தமே சென்று சேர்ந்து பலர்க்கு உபய வேதாந்த ப்ரவசனம் செய்து கீர்த்தி சேஷராயினர் ... ... ... •

## 55 ஸ்ரீமதுபயவே. பின்னப்பாக்கம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யாசாலையில் நியாய சாஸ்த்ர ப்ரவசன துரீணர்களாய் விளங்கின பண்டிதோத்தமர்களில் பரிகணிதராய்த் திகழ்ந்தவர் இந்த மஹாஸ்வாமி. இவருடன் பிறந்தவர்களான ஸ்ரீஉவே. பின்னப்பாக்கம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ராகவாசார்யஸ்வாமி என்னுமிருவரும் உபயவேத ஸாகர பாரதர்சிகளாய் விளங்கி நெடுங்காலம் ஸ்ரீபெரும்பூதூரில் வாசிக கைங்கர்ய துரந்தரர்களாய் நன்கு வாழ்ந்தவர்கள் திருவேங்கடாசார்ய ஸ்வாமி யென்னுமிவர் நியாய சாஸ்த்ரத்தில் கூலங்கஷஜ்ஞான புஷ்கலராய்ப் பலரை சாஸ்த்ரப்ரவீணர்களாய்ச் செய்தருளினர். முதிர்ந்த பிறகு அருளிச்செயல்களையும் அதிகரித்து ஸம்ப்ரதாய ப்ரவசன ப்ரவீணராயுமெழுந்தருளியிருந்தார். ... ... •

## 56 ஸ்ரீமதுபயவே புதுப்பேர். வேங்கடாசார்ய ஸ்வாமி

உத்தமாச்ரமியாய் ஸ்ரீகாஞ்சீ அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த இந்த ஸ்வாமி முதல் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸாஹித்ய வியாகரணங்கள் வாசித்துத் தேறி காஞ்சீபுரிக்கு வந்து சேர்ந்து (அடியேனுடைய திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாதிருந்த காலத்தில்) ஆண்டு ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த வேதாந்த வைஜயந்தி பாடசாலையில் (அஸ்மத் தாதபாத ஸ்தானத்தில்) உபாத்யாயராக அமர்ந்திருந்து அஸ்மதாதிகளுக்கு ஸாஹித்யவ்யாகரண ப்ரவசனம் செய்து போந்தவர். பிறகு ஸ்ரீபெரும்பூதூர்க்கே சென்றுசேர்ந்து அவ்விடத்துப் பாடசாலையிலும் உபாத்யாயராகப் பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்திருந்து மீண்டும் காஞ்சிக்கு வந்து சேர்ந்து ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி மடாதிபதியாக விளங்கித் திருநாராயணபுரத்தில் திருநாடலங்கரித்தார். •

## 57 ஸ்ரீமதுபயவே. பிரதிவாதிபயங்கரம். கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி

இந்த ஸ்வாமி காஞ்சீபுரியைச் சேர்ந்தவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் நியாய வேதாந்தங்களதிகரித்து அந்த கலாசாலையிலேயே சிலபல வருஷங்கள் சாஸ்த்ரோபாத்யாயராயிருந்தவர். சோளஸிம்ஹபுரத்தில் ஸம்ஸ்க்ருத சாலேஜ் ஸ்தாபித்து நடத்தி வந்தவர். இவருடைய திருக்குமாரர் ஸ்ரீ உ வே. ப்ர. அனந்தாசாரிய சென்பவர் நியாயவேதாந்த சிரோமணியாய் விளங்கிப் பரமபதித்தார். •

## 58 ஸ்ரீமதுபயவே. கோ க. அண்ணன் ரரமாநுஜாசாரியர் ஸ்வாமி

இவர் காஞ்சீபுரத்தைச் சேர்ந்தவர். ஜடப்ரோல் ஸம்ஸ்தான ராஜகுரு குடும்பத்தைச் சேர்ந்தவர். சேரயில் கந்தாடை அண்ணன் திருவம்சத்தவர். "தாடி

